ஈரேழ்கோட்டம் உம் - அமரர்தருக்கோட்டமுதல்
காமவேள்கோட்டம் ஈறாகியபதினான்கு

வரைக்கோட்டமும், இடநிலைப்பாலை உம் (குரல்வாயிளிவாய்க் கேட்டனள்) என்னும் இடநிலைப்பாலையும், எழுப்பு உம்-செம்பாலைமுதலியன எழுதலும், புணர்ப்பும்-சித்திரப்புணர்ப்பும் வஞ்சனைப்புணர்ப்பும், தாரத்தின் ஆக்கம் உம்-தாரங்குரலாகிய மேற்செம்பாலை பிறக்குமுக்கால்தாரம் ஆக்கம்பெறுதலும், நான்தெரிபண் உம் - தான்தெரிந்த அகநிலைபுறநிலை அருகியல் பெருஇயல்என்னும்பண்கள்நான்கும், ஊர்களின்வண்ணம்உம் "மங்கலமறையோரிருக்கை, உழவிடைவிளைப்போர் பழவிறலூர்கள்" என்றதனான் ஊர்களின் பொலிவும், ஒளி உடை பாணி உம (சீரியல்பொலிய) என்றதனான் ஒளியையுடையபாடலும், பெருந்தேவபாணி, சிறுதேவபாணியெனினும் அமையும். என்றுஇவைஅனைத்துஉம்-என்றுசொல்லப்பட்டஇவைகளைத்தோடும், பிறபொருள்வைப்பு ஓடு - நிலைபடிகம் முதலியபிறபொருள்கள் வைத்தவைப்போடு-ஒன்றித்தோன்றும் தண்கோள்நிலை உம்-பொருந்தித்தோன்றுமுறைநிலைபெறுதலும், ஒருபரிசின் ஒடுகிடந்த - புகார்காண்டம் (ஆகிய) இவை ஒருதன்மையோடு கிடந்த புகார்காண்டம், தண் கோள் ஒருசொன்னீர்மைய-முறையேகூறி யிருத்தலான் ஒன்றித்தோன்றுந் தண்கோணிலையும் என உடன் எண்ணினார்.






